


**The route to your roots**

When they look back at their formative years, many Indians nostalgically recall the vital part Amar Chitra Katha picture books have played in their lives. It was **ACK – Amar Chitra Katha** – that first gave them a glimpse of their glorious heritage.

Since they were introduced in 1967, there are now **over 400 Amar Chitra Katha** titles to choose from. **Over 90 million copies** have been sold worldwide.

Now the Amar Chitra Katha titles are even more widely available in **1000+ bookstores all across India**. Log on to www.ack-media.com to locate a bookstore near you. If you do not have access to a bookstore, you can buy all the titles through our online store **www.amarchitrakatha.com**. We provide quick delivery anywhere in the world.

To make it easy for you to locate the titles of your choice from our treasure trove of titles, the books are now arranged in five categories.

**Epics and Mythology**
Best known stories from the Epics and the Puranas

**Indian Classics**
Enchanting tales from Indian literature

**Fables and Humour**
Evergreen folktales, legends and tales of wisdom and humour

**Bravehearts**
Stirring tales of brave men and women of India

**Visionaries**
Inspiring tales of thinkers, social reformers and nation builders

**Contemporary Classics**
The Best of Modern Indian literature

**Script**
S.K. Ramachandra

**Illustrations**
Souren Roy

**Editor**
Anant Pai

*Cover illustration by: P. D. Chopra*

Amar Chitra Katha Pvt Ltd

 ISBN 978-93-5085-174-6
Published & Printed by Amar Chitra Katha Pvt. Ltd., Krishna House, 3rd Floor, Raghuvanshi Mill Compound, S.B.Marg, Lower Parel (W), Mumbai- 400 013. India
For Consumer Complaints Contact Tel : +91-22 40497436
Email: customerservice@ack-media.com






இமயமலைச்சாரல். அங்கே ஒரு சிறிய ராஜ்யம். செழிப்பான ராஜ்யம். அதன் பெயர் கபிலவாஸ்து. சாக்கியகுல அரசர் சுத்தோதனர் அதனை ஆண்டு வந்தார். அரசி மாயாதேவி அவருடைய மனைவி.

ஒருநாள் அரசி ஒரு கனவு கண்டாள். ஆறு தந்தங்களை உடைய ஒரு யானை தன் வயிற்றினுள் புகுவது போல ஒரு கனவு.



பத்து மாதங்கள் சென்றன. ஒரு நாள் அரசி தன் தந்தை வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தான். லும்பினி என்ற இடத்தை அடைந்திடும் வழியிலே அழகான தோப்பு. அங்கே....




... இறங்கினாள் அரசி. சோலை நடுவே இருந்த ஓர் ஆச்சா மரத்தை நோக்கி நடக்கலானாள். திடீரென்று பிரசவ வேதனை கண்டது.






அவ்விடத்திலேயே ஒரு குழந்தை பிறந்தது அரசிக்கு. வைகாசி மாதத்து முழுமதி நிலவினிலே. சோலையெங்கும் அமைதி நிரம்பி வழிந்தது.

செய்தி கேள்விப்பட்ட அரசர் ஓடோடிச் சென்றார் லும்பினிக்கு, தாயையும் மகவையும் அரண்மனைக்குக் கொண்டு வந்தார். குழந்தையைக் காண அரண்மனைக்கு வந்தார் அசித முனிவர்.




பெற்றோர் இருவரும் கொண்டாடி மகிழ்ந்தனர். ஐந்தாம் நாளன்று....




குழந்தை சித்தார்த்தன் பிறந்த ஏழாவது நாள்....




ஓராண்டு கழிந்த பின்பு...
குழந்தையின் தாயில்லாக் குறை உன்னால் தீர்ந்தது விரஜாவதி.
பாசம் காட்டித் தாயாக அவனை வளர்க்க நான் பேறு பெற்றேனே!


அன்பு மகன் வளர வளர ஆருடம் பலித்திடும் நாள் வருமோ என அஞ்சி-னார் அரசர்.
தனியாக அந்தச் சம்பு மரத்தடியிலேயே காலம் கழிக்கிறானே! எனக்கு அது பிடிக்கவில்லையே!
தோழப் பிள்ளைகள் கொடிய விளையாட்டு விளையாடுவதாகக் குறைப்படுகிறான்.


ஒரு நாள் சித்தார்த்தன் சோலை வழியே நடமாடிக் கொண்டிருந்த போது...
பாவம் இந்தப் பறவை மீது அம்பு எய்ய யாருக்கு மனம் வந்தது!?

தைத்த அம்பை மெதுவாக அகற்றினான் சித்தார்த்தன். பறவையின் காயத்திற்கு மருந்து போட்டான். அந்த வேளையிலே....




வந்தவன் சித்தார்த்தனின் உறவினன் தேவ தத்தன்.







அரசரிடம் போயிற்று இந்த வழக்கு.






ஆண்டுகள் பல கழிந்தன. சாக்கியப் பெரு வேளார் தண்டபாணி என்பவர் தம் திருமகள் யசோதரையின் சுயம்வரத்தை நடத்த ஏற்பாடு செய்தார். நாலா திக்கிலிருந்தும் இளவரசர்கள் வந்திருந்தார்கள்.



சித்தார்த்தனையே தன் மணாளனாகத் தேர்ந்தெடுத்தாள் யசோதரை.




யசோதரையின் தேர்வைக் கண்டு மனமுடைந்த இளவரசர்கள் பெருவேளார் தண்டபாணியை அணுகினார்கள்.
அரச குல மங்கையாம் தங்கள் செல்வியை சித்தார்த்தனுக்கா, மணமுடிப்பீர்கள்? போர்க் கலை அறியாதவன் அவன்.
தாங்கள் வில்வித்தைப் போட்டி ஒன்றை நடத்தி, அதில் வெல்பவனுக்கு தங்கள் மகளை மணமுடிப்பதே பொருத்தம்.


தம் மகளின் மனத்தை மாற்ற முயன்றார் தண்டபாணி.
யசோதரா! வேறு யாரையாவது நீ தேர்ந்தெடுத்தால் நலமாயிருக்கும்.
அப்பா என் விருப்பம் இதுதான். அனுமதி வேண்டுகிறேன்.


இதன் விவரம் அறிந்த அரசர் சுத்தோதனர் வருந்தினார்.
சிந்தனை ஏனோ அப்பா என்ன கவலை?
மகனே, உனக்குப் போரிடத் தெரியாது என்று மக்கள் பேசிக் கொள்கிறார்களே.


தண்டபாணியார் ஒரு பரீட்சை நடத்திப் பார்க்கட்டுமே. நான் பங்கு கொள்கிறேன்.
அப்படிச் சொல், மகனே! உன்னுடைய முன்னோர்கள் போரிலே வல்லவர்கள். வீரப்பரம்பரையிலே வந்தவன் நீ. மறவாதே!

போட்டியைக் காண மக்கள் திரண்டு வந்தார்கள்.







சித்தார்த்தனுக்கும் யசோதரைக்கும் சீரும் சிறப்புமாகத் திருமணம் நடந்தது.

இளவரசன் சித்தார்த்தன் எல்லாவித வசதிகளுடனும் வாழ வழியமைத்துக் கொடுத்தார் அரசர்.


விரைவில் அவர்களுக்கு ஒரு மகன் பிறந்தான். பேரன் பிறந்த செய்தி கேட்டு மகிழ்ந்தார் மன்னர் சுத்தோதனர்.
அரசே! பிள்ளைக் குழந்தை!
நல்லது! மகிழ்ச்சி. சித்தார்த்தன் இனிமேல் துறவு கொள்ளத் துணியவே மாட்டான்!


ஒரு நாள்...
அப்பா, நான் இந்த அரண்மனைக்கு அப்பால் சென்று வெளியுலகைக் காண விரும்புகிறேன்
உனக்காகவே தேர் ஒன்றை அமைக்கச் செய்கிறேன். வந்ததும் நீ அதில் ஏறிச் செல்லலாம்.


சில நாட்களுக்குப் பிறகு, நான்கு குதிரைகள் பூட்டிய மணித்தேர் ஒன்றை சன்னா என்பவன் ஓட்ட, அதிலே அமர்ந்து நகர வீதிகளைக் கடந்து சென்றான் சித்தார்த்தன்.
இளவரசர் போகிறார். அவர் அழகே அழகு!
அது மட்டுமா? அஞ்சாத வீரர். என்றும் கேள்விப் பட்டிருக்கிறேன்.


எவ்விதமான துயரக்காட்சியும் தன் மகனின் கண்களில் படக்கூடாது என்று சுத்தோதனர் உத்தரவிட்டிருந்தார். நகரைக்கடந்து மேலும் ஓட்டிச்சென்ற போது, நடுவழியில்...
சன்னா. யார் இவர்? தலை ஏன் வெளுத்துள்ளது ஆளே ஒடுங்கி இருக்கிறாரே! தோல் சுருங்கி இருக்கிறதே! இவருக்கென்ன?
தலைவா! அவர் ஒரு கிழவர். வயது முதுமையால் கூன் விழுந்திருக்கிறது.


முதுமையா? எல்லாருக்கும் முதுமை வருமா, சன்னா?
ஆம், எவரும் முதுமை அடைந்தேயாக வேண்டும், இளவரசே!


என்ன! என் யசோதரா கூட இப்படி ஆவாளோ கிழவியாக? என் உடல் வலிமையும் போய் விடுமா வயது ஏற ஏற?


மற்றொரு நாள்.
அஃதென்ன, அந்த மனிதனுக்கு என்ன ஆகிவிட்டது?
ஐயே! அவனுக்கு உடம்பு சரியாக இல்லை, நோவினால் தவிக்கிறான்.


இவனுக்கு மட்டும் ஏன் இந்த நோய்?
நோயும் நொடியும் வராமல் தப்பிய மனிதரே இல்லை, எம்பெருமானே!


நான் கூடவா?
நீங்களும் விதிவிலக்கு அல்ல, ஐயா!


மற்றும் ஒரு நாள்
அவனை ஏன் தூக்கிச் செல்கிறார்கள் இப்படி? சன்னா?
அந்த ஆள் இறந்து போய் விட்டான்.


இறந்துபோன ஆள் அவன் ஒருவன்தானா? பிறரும் இறப்பதுண்டோ?
பிறப்பவன் எவனும் ஒரு நாள் இறப்பது நிச்சயம்.


எனக்கு வேதனையாக இருக்கிறது சன்னா. ரதத்தை அரண்மனை திருப்பு.


திரும்பி வரும் வழியிலே....
சற்றே நிறுத்து சன்னா. யார் இவர்? சாந்தி தவழுகிறதே இவரிடம். எவரிடமும் காணாத ஒளி இவரிடம் தெரிகிறதே!
இவர் ஒரு தவஞானி; துறவி, வாழ்வின் இன்ப துன்பங்களைத் துறந்து மெய்யறிவு நாடுபவர்.

அரண்மனையிலே....

சித்தார்த்தா! என் செல்வமே! மனம்வாடி இருக்கிறாயே! உன் வருத்தந்தான் என்ன?

அம்மா! உலகமே நிலையின்றி உருமாறி வருவதை உணர்ந்தேன்; அழகு தேயக் கண்டேன். உயிர்கள் மாயக் கண்டேன். மனிதன் முதுமையும் மூப்பும் அடையக் கண்டேன்; நோயுற்று மடியக் கண்டேன். மனத்திலே துயரம் கொண்டேன்.

நள்ளிரவு வேளையிலே சித்தார்த்தன் ஒரு தீர்மானத்திற்கு வந்தான்.

துயரத்திற்கு ஒரு முடிவு காணத்தான் வேண்டும். உண்மையைத் தேடிச் செல்வேன் அந்த மகானைப் போல்.

என் குதிரையை ஆயத்தம் செய் சன்னா உடனே வெளியே போக ஆசை.

அப்படியே, இளவரசே!

வெளியேறுவதற்கு முன் இளவரசன் தன் மனைவியின் படுக்கையறைக்கு வந்தான். யசோதரையும் குழந்தை ராகுலனும் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தனர்.

பிரியுமுன் குழந்தை ராகுலனை முத்தமிட்டேனானால் யசோதரா விழித்தெழ நேரும். இப்படியே புறப்படுகிறேன்.

குதிரையேறி ஊரை விட்டு அகன்றான் சித்தார்த்தன். சன்னாவும் கூடவே, சென்றான்



நகரத்திற்கு வெளியே வந்த பிறகு குதிரை மீதிருந்து சித்தார்த்தன் இறங்கினான்.




தலைமுடியைக் கத்தரித்துக் கொண்டு தனியாக நடந்தார் அந்த இளம் துறவி.



ஒரு பிச்சைக்காரன் எதிரே வந்தான்




விரைவிலே, மகத ராஜ்யத்தின் தலைநகராகிய ராஜகிரகம் சேர்ந்தார், சித்தார்த்தர். அங்கே, வீடு வீடாகச் சென்று, உணவு அளிக்கப்படும் வரை மௌனமாக நின்று நின்று நகர்ந்தார். இதனை அரசர் பிம்பிசாரர் தம் அரண்மனையிலிருந்து கவனித்தார்.



துறவி ஒருவரின் வரவைத் தம் தூதுவர் மூலம் அறிந்த பிம்பிசார மன்னர்
ஓடிச் சென்று அவரைக் கண்டார்.


உயர் குடிப்பிறந்தவர் போல் தோன்றுகிறீர் தாங்கள். பேரரசினை ஆளப்பிறந்த தங்கள் கரம் பிச்சைக்கலயம் ஏந்தலாகுமோ, ஐயா! என் ராஜ்ஜியத்திலே ஓர் உயர்பதவி தருகி - றேன் வாருங்கள் என்னோடு.


அன்பு படைத்த அரசரே! தங்கள் அழைப்பை ஏற்க இயலாதவன் நான். துயரக்கடலாய் உலகவாழ்வு காட்சி தருகின்றது. இத்துயருக்கு முடிவு காண, வேதனைக்கு விடிவு காண வழிதேட முயலுகிறேன்.
தங்கள் விருப்பம் அதுவானால் ஈடேற இறைவன் அருள் புரிவாராக! தீர்வு கண்டதும் எனக்கும் அதனைப் போதிக்க வருமாறு கோருகிறேன்.

ராஜகிரகத்தை விட்டகன்ற சித்தார்த்தர் அந்நாளில் வாழ்ந்த மாமுனிவோரை
நாடிச் சென்றார். முனிவர்களின் போதனைகள் அவருக்குத் திருப்தி தரவில்லை.
அங்கிருந்து கயை நகருக்கு அருகிலிருந்த அடர்காடான உருவில்வ வனத்துள்
புகுந்தார்.



உருவில்வ வனத்திலே ஐந்து துறவிகள் வாழ்ந்து வந்தார்கள்.




கடும் விரதம் பூண்டார் சித்தார்த்தர். காய்கனி களும், மூலிகைகளும், நீருமே அவர் உணவு. கட்டாந்தரையே படுக்கை. சில நாட்கள் கழிந்த பிறகோ அந்த உணவையும் மிகக் குறைத்தார். நாளுக்கு ஒரே ஒரு சடம்பு விதை எனவே, உடம்பு துரும்பாக இளைத்தது. ஒரு நாள் அவர் ஆற்றிலே குளிப்பதற்காகச் சென்ற போது....




தாழ்ந்த மரக் கொம்பு ஒன் றைப் பற்றியபடி மேலெழும் பிக் கரையேற முயன்றார். அவர்.




கரையேறிச் சில அடிகள் நடந்ததும் கிறுகிறுத்துத் தள்ளாடி விழுந்தார்.


...மெல்லத் தடுமாறி எழுந்தார்.


மறுநாள், ஓர் ஆலமரத்தடியிலே புத்தர் அமர்ந்திருந்த போது, ஆயர்குல மகளாகிய சுஜாதை என்பவள் அங்கு வந்தாள்; உவந்து உணவு அளித்தாள்.


உணவளித்த உனக்கு உளமார்ந்த நன்றி.


பின்னர்...
இதென்ன, தகாத செயல். மீண்டுமா நீ உணவருந்தத் தொங்கி விட்டாய்?
பட்டினி போட்டு உடம்பை வாட்டுவதால், உண்மையை எய்திட வழி அமையும் என நான் நம்ப வில்லை.


அந்தத் துறவிகள் ஐவரும் ஏமாற்றமும் அதிருப்தியும் அடைந்தனர்.
இனியும் நாம் இவனை மதிப்பது தக்க செயலல்ல.
மெய்தான். இவ்வுலக இன்பங்களிலே இச்சை கொண்டு விட்டான்.

அதன் பின்பு சித்தார்த்தர் தன்னந்-
தனியாக வாழ்வு நடத்தினார்.




ஓர் அரசமரத்தைச் சரணடைந்து
அதனடியில் தவமிருந்தார்.



பனியும், வெயிலும், பசியும், தாக-
மும் பாதிக்கவில்லை. அவரை, தாக்
கிய மழையிலும் தவம் குலைய
வில்லை.




உல்லாசக் கனவுகள் எதுவுமே அவர்
மனதில் ஒட்ட வில்லை. எவ்வித ஆசை
யும் அவர் இதயத்தை எட்ட வில்லை.



முடிவாக, ஒளிகண்டார் ஒருநாள்.



சித்தார்த்தர், சுத்த மெய்ஞ்ஞான
அருளொளி பெற்ற புத்தராக
ஆனார்.



அப்பேரின்ப நிலையிலே போதிமரத்தடியில் ஏழு நாட்கள் அமர்ந்திருந்தார் புத்தர். பிறகு, தாம்கண்ட மெய்யறிவைப் பிறருக்குப் புகட்டப்புறப்பட்டார். முதலில் காசிக்குச் சென்றார்; உருவில்வ வனவாசிகளான அந்த ஐந்து துறவிகளையும் தேடிப்போய், மான் சோலையிலே அவர்களைக் கண்டார்.




எனினும், அணுகிவந்த அவன் வடிவைக் கண்டதும், தங்களையறியாமலேயே எழுந்து நின்று மரியாதையோடு வரவேற்றனர்.




புத்தரின் போதனைகளைக் கேட்ட அந்தத் துறவிகள் ஐவரும் அவருடைய சீடர்களாக மாறினர். அப்போதே புத்த சங்கம் பிறந்தது.




அதன் பிறகு, புத்தர் உருவில்வ வனம் திரும்பினார். காசிபர் என்ற மாமுனிவரின் ஆசிரமத்தை நாடிச்சென்றார்.






தீக் கடவுளாகிய அக்னியை வழிபடுபவர் காசிப முனிவர்.







இறுதியில் காசிபர் இணங்கினார். தீயின் எதிரில் அமைதியே உருவாக அமர்ந்துகொண்டார் புத்தர். காசிபரோ வெளியில் உறங்கினார்.



மறுநாள் விடியற்காலை...




அறைக்குள் நுழைந்த காசிபர், அமைதி தவழ அமர்ந்திருந்த புத்தரைக் கண்டு திகைத்தார். தீயின் ஒளி அத் திருவதனத்திலே சுடர்விட்டது.
எம்பெருமா! தங்களையே குருவாக வரிக்கிறேன். உபதேசமருள்வீராக!


காசிபர் உள்பட, உருவில்வ வனத்தோர் பலருக்கும் உபதேசம் அருளினார் புத்தர்.


ஒரு நாள்...
குருநாதரே, பிம்பிசார மன்னர் பெரியதொரு யாகம் செய்யப் போகிறார் என்று கேள்விப் பட்டேன்.
நல்லது ராஜகிரகம் சென்றடைவோம்.


ராஜகிரகத்திற்குப் போகும் வழியிலே, ஆட்டுமந்தை ஒன்று எதிர்ப்பட்டது. அதில் ஊனமாக இருந்த ஓர் ஆட்டுக்குட்டியை புத்தர் தூக்கிக்கொண்டார்.
வாயில்லாப்பிராணி இது! அளவில்லாத் துயருக்கு ஆளாகியிருக்கக் கூடும், பாவம்!


நண்பரே எங்கு செல்கின்றீர்?
ராஜகிரகம் செல்கிறேன் இந்த ஆடுகள் அரசருடையவை. அங்கு நடக்கப் போகும் யாகத்திலே ... அதன் புனிதமான தீக்கு- இவை பலியாகப் போகின்றன.


புத்தர் ராஜகிரகம் வருகிருர் என்பதைக் கேள்விப்பட்ட பிம்பிசாரர், அமைச்சர்களோடு தாமே நேரில் வரவேற்க வந்தார்.
உருவில்வக் காசிப முனிவருடன் இருக்கிருரே புத்தர். காசிபரின் சீடராகி இருப்பாரோ?


அருகே வந்தடைந்ததும், புத்தர் தாம் தூக்கிவந்த ஆட்டுக்குட்டியை மெல்லக் கீழே இறக்கிஞர்.
புனிதரே வருக! நான் ஒரு யாகம் துவக்கி இருக்கின்றேன். மகா காசிபரும், தாங்களும் பங்கு கொண்டு நல்லருள் புரிய வேண்டும்.
இன்னல்களுக்கு நான் தீர்வு கண்டு திரும்பிய பின் தாங்கள் என்னைக் காண வேண்டும் என விரும்பினீர்களே! வந்திருக்கிறேன்.


அரசே! ஏதுமறியாத சாதுப் பிராணிகளைக் கொன்று பலியிடல் நற்செய்கையாகுமா? யாகங்களும் யக்ஞங்களும் இன்ப நல்வாழ்வுக்கு வழிகாட்ட மாட்டா?


காசிபரிடம் திரும்பினார் மன்னர்.
காசிபரே! தாங்கள் என்ன சொல்கிறீர்கள்? தீக்கடவுளை வழிபடும் தங்கள் கருத்து தான் யாதோ?


காசிபரோ புத்தரை அடிபணிந்தார்.
புத்த பிரானின் சீடன் நான்.
ஓ! புத்தர் உங்கள் குருவா? யாகத்தில் உங்களுக்கும் நம்பிக்கை போய் விட்டதா?


எனக்கு நல்வழி காட்டி அருளியவர் புத்தர். யாகத்தில் வாயில்லாப் பிராணிகளைப் பலியிட்டாலும், துக்கம் என்பதன் பிடியிலிருந்து விடுபட முடியாது.


புத்தரிடமே திரும்பினார் பிம்பிசாரர்.
எம்மானே! தங்கள் அறிவுரை கேட்கக் காத்து நிற்கின்றோம்.
போதமொழி அருளினார் புத்தபெருமான்.


அண்ணலே! யாகம் செய்யும் எண்ணத்தையே கைவிட்டு விட்டேன். புத்தபெருமானே! புகலிடம் எனச் சரண் புகுந்தேன்.


மறு நாள், புத்தருக்கும் அவருடைய சீடர்க - ளுக்கும் அரண்மனையிலே உணவு அளித்து உபசரித்தார் மன்னர், அதன் பிறகு....
குருநாதரே! வேணுவனம் என்ற என் பூங்கா வினைப் புத்தசங்கத் திற்கு அளிக்கிறேன்.


ஒரு நாள், கிருஷ்ண கோதமி என்பவள், தன் இறந்த குழைந்தையோடு, கண்ணீர் பெருகப் புத்தரிடம் வந்தாள்.
குருவே! என் ஒரே செல்வத்தை இழந்து விட்டேன். உயிர்ப் பிச்சை அருளுங்கள்.
துக்கத்தை அடக்கு. நான் சொல்வது போலச் செய். கடுகு வேண்டும் எனக்கு. சாவே நிகழாத வீட்டைத் தேடிப்பிடித்து அங்கிருந்து கடுகளவு கடுகு கொண்டு வந்து கொடு என்னிடம். உன் குழந்தை பிழைத்தெழச் செய்து விடுகின் றேன்.


வீடு வீடாகச் சென்று விசாரித்தாள் கிருஷ்ண கோதமி.
சென்ற ஆண்டு என் கணவரை இழந் தேன்.
இருகுழந்தைகளையும் பறிகொடுத்தவள் நான்.
என் தாயார் நேற்று தவறிப் போனார்.


ஏமாற்றத்தோடு கிருஷ்ண கோதமி புத்தரிடம் திரும்பி வந்தாள்.
குருவே! சாவு ஏற்படாத இடமே அகப்பட வில்லையே!


குழந்தாய்! பிறந்த எவரும் ஒரு நாள் இறக்கத்தான் வேண்டும். இறுதியாக வாழ்விலே எஞ்சுவது துயரம்தான்.
ஆசையிலிருந்து விடுபடுவோமானால் துயரத்திலிருந்து விடுபட்டவர்கள் ஆவோம்.


சில ஆண்டுகள் கழிந்தன, சுத்தோதனர் அவையிலே.
வேந்தே! நம் இளவரசரின் புகழ் எங்கும் பரவியுள்ளது. பற்பலர் அவருடைய சீடர்களாக ஆகி, அவருடைய போதனைகளைப் பரப்புகின்றனர்.
சித்தார்த்தனிடம் உடனே செல். எனக்கு வயதாகி விட்டதால் இறக்குமுன் அவனைப் பார்க்க விரும்புகிறேன் என்று கூறு.


புத்தர் கபிலவாஸ்து நகரை அடைந்தார்.
வாராய், மகனே. இனி நீ முடி சூடி அரசாள வேண்டும்.
தந்தையே! தவ வாழ்வை மேற்கொண்டு விட்டவன் நான்
அருகிலிருந்த தோப்பிலே புத்தருக்கு இருக்கை கொடுத்தார் அரசா.

மறுநாட் காலை....










அரண்மனையை அடைந்த புத்தர், அங்கு குழுமியிருந்த எல்லோரிடமும் கனிவுடன் உரையாடினார்.



அவ்விடத்தில் எங்கும் யசோதரை கண்ணில் படாததைக் கவனித்தார் புத்தர்.




நீ சென்ற பிறகு அவள் மகிழ்ச்சி என்பதையே மறந்து விட்டாள். கூந்தலைக் குறுக்கிக் கொண்டாள். எளிய உடை உடுத்துகிறாள். சரியாகவே சாப்பிடுவது இல்லை, உன் போலவே.



தம் இரு சீடர்கள் பின் தொடர, புத்தர் யசோதரையின் அறைக்குச் சென்றார்.







பிறகுபவர் அங்கிருந்ததைக் கண்டு எழுந்து, சற்று அப்பால் விலகிப் போய் உட்கார்ந்து கொண்டாள் யசோதரை.



ஆறுதல் கூறித் தேற்றினார் புத்தர்.


புத்தர் கபிலவாஸ்துவை அடைந்து ஒரு வாரம் ஆயிற்று.
ராகுலா! அதோ அமர்ந்திருக்கிறாரே நடுவில், அவர்தானடா உன் தந்தை. நேராக அவரிடம் போ. போய், அவருடைய சொத்திலே உன்னுடைய பங்கைக் கேள்.


புத்தரை அணுகினான் ராகுலன்.
அப்பா! அம்மா என்னை அனுப்பினார். உங்கள் சொத்திலே என் பங்-கைக் கேட்கச் சொன்னார்.


புத்தர் தம் சீடர் சாரிபுத்திரனிடம் திரும்பினார்.
என் சொத்திலே தன் பங்கைக் கேட்கிறான் என் மைந்தன். இவனை நம் சங்கத்திலே சேர்த்துக்கொள்க.


ராகுலனைத் தொடர்ந்து, புத்த சங்கத்திலே ஏராளமான அரசகுல இளைஞர்கள் சேரலாயினர். அவர்களிலே தேவதத்தனும் ஒருவன். அவனும் புத்தரின் பக்கத்திலே இருந்து, எங்கும் அவருடன் சென்றான். ஒரு நாள்—
தங்களுக்கு ஓய்வு தேவை. சங்கத் தலைமை-யினை என்னிடம் தாருங்கள்.
இல்லை, தேவதத்தா! என் அறிவுரையை இன்னமும் சங்கம் நாடி நிற்கிறது.

புத்தரைக் கண்டு பொறாமை கொண்ட தேவதத்தன், ராஜகிரகம் சென்று பிம்பிசார மன்னனின் மகனாகிய அஜாதசத்ருவைக் கண்டான்.




தேவதத்தனின் ஆலோசனையின் படியே செய்தான் அஜாதசத்ரு.

அரசராகி விட்டேன், தேவதத்தா. நன்றி. என்ன உதவி வேண்டுமானாலும் கேள். தருகிறேன்.

அரசே! நான் புத்தரை வெறுக்கிறேன். அவரைக் கொன்றுவிட வேண்டும். உங்கள் உதவி தேவை எனக்கு.



புத்தரைக் கொன்றுவிட தேவதத்தன் பல வழிகளைக் கையாண்டான்.




அப்பாறை இரண்டாகப்பிளந்து, புத்தர் மீதுபடாமல், பக்கத்திற்கு ஒரு துண்டாக விழுந்தது.


தேவதத்தனினின் ஆட்கள் பலர் மனம் மாறி, புத்த சங்கத்திலே சேர்ந்து பணியாற்ற வந்தனர்.
பாறை அவரைக் கொல்லவில்லையே!
உருவம் சிறிது, ஆனாலும் அவர் ஒரு மகான். அவரிடம் சரணடைவோம்.


நம்மவர்களில் பலரைத் தமது சங்கத்தில் இழுத்துக் கொண்டுவிட்டார் புத்தர்.
அவர் மீது ஒரு யானையை ஏவிவிட்டால் என்ன?


மேலும் ஒரு கட்டளை இட்டான் அஜாதசத்ரு.
நளகிரி என்ற யானைக்கு போதை மருந்து கொடுத்து, புத்தர் வரும் வழியிலே அதைக் கட்டவிழ்த்து விடுங்கள்.


ஓடு, ஓடு. யானை, நளகிரி அறுத்துக்கொண்டு ஓடுகிறது. ஏற்கனவே பாதி நகரம் பாழ். இருபது பேர் பலி.


குருவே! மத யானை ஒன்று பாய்ந்து வருகின்றது இந்த வழியாக.
வரட்டும். நம்மை ஒன்றும் செய்யாது.


வெறிகொண்ட நளகிரி, புத்தரை நோக்கி நாற்கால் பாய்ச்சலிலே ஓடி வந்தது.


புன்னகை பூத்தவாறு புத்தர் தம் கரத்தை உயர்த்தினார். அக்கணமே அந்த யானை அவரிடம் அடி பணிந்தது.


அஜாத சத்ருவோ சுகமிழந்தான்; அடிக்கடி நோய்வாய்ப்பட்டான். ஜீவகர் மருந்து கொடுத்து வந்தார்.
ஜீவகரே, எனக்கு ஏன் இந்த கதி?
அரசே! உங்களை வாட்டுவது உடல்நோய் அல்ல, உளநோய். புத்தர் ஒருவரே இதனை ஆற்ற வல்லவர்.


அவரையே நாடுவோம். இப்போது எங்கிருப்பார்.
வைசாலியில் உள்ள ஆமர வனத்தில்.


... அந்த இடம் ஆமரபாலி என்ற நடனமாதுக்கு அல்லவா சொந்தம்?
ஆம் அரசே! ஆனால் அதை அவள் புத்தருக்குக் கொடையாக வழங்கி விட்டாள்.


ஆமர வனத்தை அடைந்தான் அஜாத சத்ரு—
ஆளரவமே இல்லையே. புத்தர் எங்கே?
இங்குதான் இருக்கிறார். பன்னிரண்டாயிரத்துக்கு மேற்பட்ட சீடர்களோடு.


அஜாத சத்ருவின் மனம் அல்லல்பட்டது
பன்னிரண்டாயிரம் சீடர்கள்! அப்படியிருந்தும் ஆளில்லாத அமைதி நிலவுகிறதே! எதற்காக என்னைக் கொணர்ந்தாய் இவ்விடம்? கொல்லவா? சதியா செய்கிறாய்? சொல்?
என்னை நம்புங்கள். அரசே! வாருங்கள் என்னோடு.


அமைதியே உருவான அடியார் கூட்டத்திடையே. அருள் மழை பொழிந்தார் அங்கே ஒரு மகா ஞானி. கண்டறியாதன கண்டான் அஜாத சத்ரு; கட்டுண்டான்.
உலகிலுள்ள துன்பம், பிணி, அச்சம் வெறுப்பு அனைத்துக்கும் காரணம் எது? ஆசை. ஆசைத்தளையிலிருந்து விடுபடுபவன் எவனோ அவனே கவலைக்கடலைக் கடப்பவன். அச்சத்தை வெல்பவன்
அருள் மாரியோ. அருமருந்தோ!
புத்தபிரானின் சீடராக அமர்ந்தார் அஜாத சத்ரு.


அதிவிரைவிலே தேவதத்தனும் மனம் வருந்திக் கண்திறந்தான். தன் குழுவினரிடம், கூறினான் அவன்.
அழைத்துச் செல்வீர் இந்தப் பாவியை அந்த அருளாளரிடம். அலைபட்ட என் மனத்தை ஆற்றக் கூடியவர் அவரே.

தேவதத்தனைத் தூக்கிவந்த பணியாட்கள் பல்லக்கை இறக்கி, பசியாற்றிக்கொள்ள அவ்விடத்தை விட்டு அகன்றனர்.




புத்தரை அடைந்திட, அடிவைத்து நகர்ந்த தேவதத்தன் தள்ளாடி விழுந்தான்.







அருள் கனிந்த முதுமை எய்தி நெடுங்காலம் வாழ்ந்தார் புத்தர். அவருடைய போதநெறியிலே புகலிடம் கண்ட மக்கள் பல கோடி. பலமொழியினர், தொலை நாடுகளில் வாழும் பல்வேறு சமுதாயத்தினர். அருளாளரான அவருடைய அடிச்சுவட்டைப் போற்றிப் பின்பற்றி வருகின்றனர்.

# WHICH OF THE ACKS HAVE YOU STILL NOT READ?

**ACK EPICS AND MYTHOLOGY**

*Best known stories from the Epics and the Puranas*

ABHIMANYU
ANDHAKA
ANIRUDDHA
ARJUNA, TALES OF
ARUNI AND UTTANKA
ASHWINI KUMARS
AYYAPPAN
BAHUBALI
BALARAMA, TALES OF
BHEEMA AND HANUMAN
BHEESHMA
CHANDRAHASA
CHURNING OF THE OCEAN
DASHARATHA
DHRUVA AND ASHTAVAKRA
DRAUPADI
DRONA
DURGA, TALES OF
ELEPHANTA
GANDHARI
GANESHA
GANGA
GARUDA
GHATOTKACHA
GITA, THE
GOLDEN MONGOOSE, THE
HANUMAN
HANUMAN TO THE RESCUE
HARISCHANDRA
INDRA AND SHACHI
INDRA AND SHIBI
JAGANNATHA OF PURI
JAYADRATHA
KACHA AND DEVAYANI
KARNA
KARTTIKEYA
KRISHNA
KRISHNA AND JARASANDHA
KRISHNA AND NARAKASURA
KRISHNA AND RUKMINI
KRISHNA AND SHISHUPALA
KRISHNA AND THE FALSE VAASUDEVA
KUMBHAKARNA
LORD OF LANKA, THE
MAHABHARATA
MAHIRAVANA
NACHIKETA
NAHUSHA
NALA DAMAYANTI
NARADA, TALES OF
PANDAVA PRINCES, THE
PANDAVAS IN THE HIDING, THE
PRAHLAD
RAMA
RAVANA HUMBLED
SATI AND SHIVA
SAVITRI
SHIVA PARVATI
SHIVA, TALES OF
SONS OF RAMA, THE
SUDAMA
SURYA
SYAMANTAKA GEM, THE
TRIPURA
ULOOPI
UPANISHADS, TALES FROM
VALI
VISHNU, TALES OF
VISHWAMITRA
YAYATI
YUDHISHTHIRA, TALES OF

**ACK INDIAN CLASSICS**

*Enchanting tales from Indian literature*

ANANDA MATH
ANCESTORS OF RAMA
DEVI CHOUDHURANI
KANNAGI
KAPALA KUNDALA
MALAVIKA
RATNAVALI
SHAKUNTALA
UDAYANA
URVASHI
VASANTASENA
VASAVADATTA

**ACK FABLES AND HUMOUR**

*Evergreen folktales, legends and tales of wisdom and humour*

ACROBAT AND OTHER BUDDHIST TALES, THE
ADVENTURES OF AGAD DATTA, THE
ADVENTURES OF BADDU AND CHHOTU, THE
AMRAPALI
ANGULIMALA
BAG OF GOLD COINS, A
BATTLE OF WITS
BIKAL THE TERRIBLE
**BIRBAL STORIES**
- BIRBAL THE CLEVER
- BIRBAL THE GENIUS
- BIRBAL THE JUST
- BIRBAL THE WISE
- BIRBAL THE WITTY
- BIRBAL TO THE RESCUE
- THE INIMITABLE BIRBAL

CELESTIAL NECKLACE, THE
CHANDRALALAT
COWHERD OF ALAWI, THE
FEARLESS BOY AND OTHER BUDDHIST TALES, THE
FOOL'S DISCIPLES, THE
FRIENDS AND FOES
GOPAL AND THE COWHERD
GOPAL THE JESTER
**HITOPADESHA TALES**
- CHOICE OF FRIENDS
- HOW FRIENDS ARE PARTED

**JATAKA TALES**
- BIRD STORIES
- DEADLY FEAST, THE
- DEER STORIES
- ELEPHANT STORIES
- GIANT & THE DWARF, THE
- HIDDEN TREASURE, THE
- JACKAL STORIES
- MAGIC CHANT, THE
- MONKEY STORIES
- MOUSE MERCHANT, THE
- NANDIVISHALA
- STORIES OF COURAGE
- STORIES OF WISDOM
- TALES OF MISERS
- TRUE FRIENDS

KESARI THE FLYING THIEF
KING KUSHA
LEARNED PANDIT, THE
MAGIC GROVE, THE
MARYADA RAMA, TALES OF
**PANCHATANTRA TALES**
- BRAHMIN & THE GOAT
- CROWS AND OWLS
- DULLARD AND OTHER STORIES
- GREEDY MOTHER-IN-LAW, THE
- HOW THE JACKAL ATE THE ELEPHANT
- JACKAL & THE WAR DRUM, THE
- PRICELESS GEM, THE
- PRINCE AND THE MAGICIAN
- QUEEN'S NECKLACE, THE

PANDIT AND THE MILKMAID
RAMAN OF TENALI
RAMAN THE MATCHLESS WIT
SAKSHI GOPAL
SHRENIK
TIGER & THE WOODPECKER,
TIGER-EATER, THE
VIKRAMADITYA'S THRONE

**ACK BRAVEHEARTS**

*Stirring tales of brave men and women of India*

AJATASHATRU
AKBAR
AMAR SINGH RATHOR
ASHOKA
BAGHA JATIN
BAJI RAO I
BALADITYA & YASHODHARMA
BANDA BAHADUR
BAPPA RAWAL
BENI MADHO AND PIR ALI
BHAGAT SINGH
BIMBISARA
CHAND BIBI
CHANDRA SHEKHAR AZAD
CHANDRAGUPTA MAURYA
DURGADAS
ELLORA CAVES
HARSHA
HISTORIC CITY OF DELHI, THE
JAHANGIR
JALLIANWALA BAGH
KALPANA CHAWLA
KRISHNADEVA RAYA
KUNWAR SINGH
LACHIT BARPHUKAN
LALITADITYA
MANGAL PANDE
NOOR JAHAN
PADMINI
PANNA AND HADI RANI
PAURAVA AND ALEXANDER
PRITHVIRAJ CHAUHAN
RAJA BHOJA
RAJA RAJA CHOLA
RANA KUMBHA
RANA PRATAP
RANA SANGA
RANI ABBAKKA
RANI DURGAVATI
RANI OF JHANSI
RANJIT SINGH
RASH BEHARI BOSE
SAMUDRA GUPTA
SEA ROUTE TO INDIA
SHAH JAHAN
SHALIVAHANA
SHER SHAH
SHIVAJI
SHIVAJI, TALES OF
SUBHAS CHANDRA BOSE
SULTANA RAZIA
TANAJI
THE RANI OF KITTUR
TIPU SULTAN
VEER HAMMIR
VEER SAVARKAR
VELU THAMPI
VIKRAMADITYA

**ACK VISIONARIES**

*Inspiring tales of thinkers, social reformers and nation builders*

ADI SHANKARA
AMBEDKAR, BABASAHEB
BASAVESHWARA
BIRLA G.D.
BUDDHA
CHANAKYA
CHAITANYA MAHAPRABHU
CHINMAYANANDA, SWAMI
CHOKHA MELA
DAYANANDA
DESHBANDHU CHITTANRANJAN DAS
FA HIEN
GURU ARJAN
GURU GOBIND SINGH
GURU NANAK
GURU TEGH BAHADUR
HIUEN TSANG
J.R.D.TATA
JAGADIS CHANDRA BOSE
JAMSETJI TATA
JAWAHARLAL NEHRU
JAYAPRAKASH NARAYAN
JNANESHWAR
KABIR
KALIDASA
LAL BAHADUR SHASTRI
LOKAMANYA TILAK
MADHVACHARYA
MAHAVIRA
MEGASTHENES
MIRABAI
MOTHER TERESA
PRANAVANANDA, SWAMI
RABINDRANATH TAGORE
RAMAKRISHNA, SRI
RAMANA MAHARSHI
RAMANUJA
RAM SHASTRI
SAIBABA, TALES OF
SHANKAR DEV
SOORDAS
SUBRAMANIA BHARATI
TANSEN
TULSIDAS
VIDYASAGAR
VIVEKANANDA
ZARATHUSHTRA

**ACK SPECIAL ISSUES**

BHAGAWAT - THE KRISHNA AVATAR
DASHA AVATAR
JESUS CHRIST
MAHABHARATA
MAHATMA GANDHI
RAM CHARIT MANAS
VALMIKI'S RAMAYANA




All titles available on www.AmarChitraKatha.com

# புத்தர்

அரசன் சுத்தோதனன் துயரக் கடலில் மூழ்கியிருந்தான். பொன்னும், பொருளும், அன்பும், மரியாதையும் மற்றும் சகலவிதமான சவுகரியங்களும் அவனது அழகான வாரிசான சித்தார்த்தனைச் சூழ்ந்திருந்தபோதிலும் அவன் திருப்தியடையவில்லை.
அரச உடைகளைக் களைந்தெறிந்து கையில் பிச்சை வாங்கும் குவளையை ஏந்தி, தனது சொகுசான அரச வாழ்க்கையைத் துறந்து, குடும்பத்தினரை விட்டு இளவரசன் சித்தார்த்தன் ஒருநாள் இரவு அரண்மனையிலிருந்து வெளியேறினான்.
ஒருமர நிழலில் அமர்ந்து வாழ்க்கையின் உண்மை தத்துவத்தை அறிந்துகொள்ள ஒரு சன்யாசி வாழ்க்கையை மேற்கொண்டான்.
அவனுடைய தேடுதல் அவனை அறிவியலும், பகுத்தறிவும் கொண்ட ஒரு தெளிவான நிலையில் கொண்டுபோய் நிறுத்தியது. விழிப்புணர்ச்சி பெற்ற அவன் புத்தர் ஆனான்.



‘இந்தியாவின் ஒப்பற்ற கலை, கலாசாரத்தைப் பிரதிபலிக்கக் கூடியவை அமர் சித்திரக் கதைகள். என் குழந்தைகள் சிறுவயதில் இந்தப் புத்தகங்களை ஆர்வத்துடன் படித்தார்கள். அதே போல இந்தியா முழுவதும் ஏராளமான குழந்தைகள் இந்தப் புத்தகங்களைப் படித்திருப் பார்கள்! குழந்தைகளைச் சென்றடைய சிறந்த வழி சித்திரக் கதைகள்தான். இதன்மூலம் வாசிக்கும் பழக்கம் அதிகரிக்கும். நமது கலாசாரத்தைப் பற்றிய தேடல்கள் உருவாகும்!’

- நாராயணமூர்த்தி, நிறுவனர். இன்ஃபோசிஸ்


